(உசா௩.) இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் * தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட கல்லா விளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.

திணையும் துறையும் அவை.
அவனைத் தொடித்தலைவிழுத்தண்டினூர் பாடியது.

(இ - ள்.) இப்பொழுது நினைந்து இரக்கமாகின்றது; செறிந்த மணலிடத்துச் செய்யப்பட்ட வண்டற்பாவைக்குப் பறிக்கப்பட்ட பூவைப் பறித்துச் சூடிக் குளிர்ந்த பொய்கையின்கண் விளையாடும் மகளிரோடு கைகோத்து அவர் தழுவினவிடத்தே தழுவி ... ... ... யசைத்து ஒளித்துச்செய்யுமஃது அறியாத வஞ்சனையில்லாத இளமைத்தருடனே கூடி உயர்ந்த கோடுகளையுடைய மருதின் துறையிடத்தே வந்து உறத் தாழ்ந்து நீர்க்கு அண்ணிதாகப் படிந்த கொம்பிலேயேறி, அழகுமிகக் கரையிலுள்ளோர் வியப்பத் திரையிடத்துத் திவலையெழ ஆழத்தானெடிய நீரையுடைய மடுவின்கண் துடுமென்றொலிப்பக் குதித்து மூழ்கி மணலைமுகந்துகாட்டிய கல்வியில்லாத இளமை இரங்கத்தக்கது; அவ்விளமை எவ்விடத்துண்டுகொல்லோ; பூண் செறித்த தலையையுடைய பரியதண்டுக்கோலையூன்றித் தளர்ந்து இருமல் இடையே செருங்கின சிலவார்த்தையையுடைய பெரிய முதுமையையுடையோமாகிய எமக்கு

ளுக்கு.—(எ - று)

எமக்கு இளமை யாண்டுண்டுகொல்லோ? அதுதான் இரங்கத்தக்கதெனக் காட்டுக.

இளமைகழிந்து இரங்கிக்கூறுதலான் இதுவும் கையறுநிலையாயிற்று. 'மனை யெனவறியா' என்று பாடமோதுவாருமுளர். (உசக)

(உசஉ) பாணர் சென்னியும் வண்டுசென் றூதா
விறலியர் முன்கையுந் தொடியிற் பொலியா
இரவன் மாக்களு ......... .........

---

* தங்குவழித்தங்கியென்றும் பாடம்.

† நீர்க்கணிப்படிந்தவென்றும் பாடம்.

பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ!
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.

பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது.

ஆனந்தப்பையுளாவது—

"விழுமங் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வீயக் குழைந்துயங் கின்று."

(இ - ள்.) பலசான்றவிரே, பலசான்றவிரே, நின்தலைவனோடிறப்ப நீபோ வென்றுகூறாது அதனைத் தவிர்கவென்றுசொல்லிவிலக்கும் பொல்லாதவிசாரத்தை யுடைய பலசான்றவிரே, அணிலினதுவரிபோலும்வரியையுடைய வளைந்த வெள்ளரிக்காயை அரிவாளால் அரிந்திடப்பட்ட விதைபோன்ற நல்ல வெள்ளிய நறிய நெய்தீண்டாமல், இலை இடையேபயின்ற கையாற்பிழிந்துகொள்ளப்பட்ட நீர்ச் சோற்றுத்திரளுடனே வெள்ளிய எள்ளரைத்தவிழுதுடனே புளிகூட்டி அடப் பட்ட வேளையிலைவெந்த வேவையுமாகிய இவை உணவாகக்கொண்டு பருக்கைக ளாற்படுக்கப்பட்ட படுக்கையின்கண் பாயுமின்றிக்கிடக்கும் கைம்மைநோன்பால் வருந்தும் பெண்டிருள்ளேமல்லேம், யாம்; புறங்காட்டின்கண் உண்டாக்கப்பட்ட கரிய முருட்டால் அடுக்கப்பட்டபிணப்படுக்கை உங்களுக்கு அரிதாவதாகுக; எமக்கு எம்முடையபெரியதோளையுடையனாகிய கொழுநன் இறந்துபட்டானாக, முகை யில்லையாகவிள்ளவிழ்ந்த இதழ்மலர்ந்த தாமரையையுடைய நீர்செறிந்த பெரியபொய்கை யும் தீயும் ஒருதன்மைத்து. (எ - று.)

247–249



சிறுநனி தமிய ளாயினு மின்
னின்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே.

திணையும் துறையும் அவை.
அவள் தீப்பாய்வாளைக்கண்டு மதுரைப்பேராலவாயார் சொல்லியது.

(இ - ள்.) யானைகொண்டுவரப்பட்ட உலர்ந்தமரத்துவிறகால் வேடர்மூட்டப்பட்ட கடைந்துகொள்ளப்பட்ட எரியாகியவிளக்கினது ஒளியையுடைத்தாகிய மடவியமானுகிய பெரியநிரை வைகிய உறக்கத்தையெழுப்பி மந்திக்கும் அணங்குடைத்தேவியையுடையமுற்றத்து நீர்வடிந்த மயிர் மிக்கபுறத்திலவீழப் பெரிய துன்பமேவியகண்ணையுடையளாய்ப் புறங்காட்டைப்பார்த்துத் தான்சுழலும் தன் தலைவன்முழவினதுகண் மார்ச்சனையுலராத்காலையுண்டிய அகலியமார்பிலுள் மிகச் சிறிதுபொழுது தனித்திருப்பினும் இனியவுயிர் தளரும் அன் இளமைபுறங்கொடுத்து.—(எ - று.)

……… ………யானவற்கு அஞ்சிநடுங்குதல் ……… ………

அம்ம – அசை.

இளமைபுறங்கொடுத்துப் பெருங்காடுநோக்கித் தான் தெருமருமெனக்கூட்டுக.

(உசஅ.) அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே.

திணை - அது; துறை - தாபதநிலை.

.......†எக்கூர்மாசாத்தனுர் பாடியது.

தாபதநிலையாவது,—

‡ "குருக்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்
கருந்தடங் கண்ணி கைம்மை கூறின்று."

(இ - ள்.) இரங்கத்தக்கன, சிறிய வெளிய ஆம்பல்; அவைதாம், யாம் இளையே மாயிருக்க முற்காலத்துத் தழையாயுதவின; இக்காலத்துப் பெரியசெல்வத்தையுடையதலைவன் இறந்தானாக, உண்ணுங்காலமாறி இன்னாத வைகும்பொழுதின் கண் உண்ணும் தம் அல்லியிடத்துண்டாம் புல்லரிசியாயுதவின.—(எ - று.)

தாமின்புறுங்காலத்தும், துன்புறுங்காலத்தும், துணையாயுதவினவாதலான், அளியவாயினவென் ஆம்பலைநோக்கிக்கூறியவாறாயிற்று.

"செல்லுலாவுஞ்செல்லாம் புல்லென்றல் மரபு." (உசஅ)

(உசகூ.) கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ

* நீங்குமென்றும் பாடபேதமுண்டு. † ஒக்கூரென்றும் பாடபேதமுண்டு.
‡ புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், கூ.

கண்ணேதாழ்ந்த புரிந்தசடையைப்புலர்த்துவோன். (எ - று)

ஆழி வேட்டுப் புலர்த்துவோனென இயையும்.

முன்பு இழைநெகிழ்த்தவெள்ளற்கண்டேம், அவன் இப்பொழுது புறந்தாழ் புரிசடை புலர்த்தானின்றேனென அவனைக்கண்டு வியந்துகூறியவாறு.

பாலையென்றது, பிறிது எவ்வுணர்வுமின்றிக் காமவேட்கையாகிய ஒருகுறிப்பினை. கானயானைதந்தவிறகென்றது, இவன்தவமிகுதியான் அதுவும் ஏவல்செய்தல். (உருச)

252, 253.



(உருஉ.) கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
2 தில்லை யன்ன புல்லென் சடையோ
3 டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
4 யில்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
(ரு) சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே.

திணையுந் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.)—ஒலிக்கும்வெள்ளிய அருவிநீரை ஏற்றலாற் பழையநிறம் மாறித் தில்லந்தளிர்போன்ற புற்கென்றசடையோடுகூடிநின்று செறிந்த இலையையுடைத் தாளியைப் பறிப்போன், மனையின்கணியங்கும் மடப்பத்தையுடையமயிலை அகப்படுத்திக்கொள்ளும் சொல்லாகிய வலையையுடைய வேட்டைக்காரனாயினன் முன்பு.—(எ - று.)

— இதுவும் அவன்நிலைமையைக்கண்டு வியந்துகூறியது. (உருஉ)

(உருங.) என்றிறத் தவலங் கொள்ள லினியே
2 வல்லார் கண்ணி யிளையர் திளைப்ப
3 *நகா அலென் வந்த மாறே யெழாநெற்
4 பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்
(ரு) வளையில் வறுங்கை யோச்சிக்
6 கிளையு ளோய்வலோ கூறுநின் னுரையே.

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை.
.........†குளம்பாதாயனார் பாடியது.

முதுபாலையாவது,—
‡“காம்புயர் கடத்திடைக் கணவனை யிழந்த
பூங்கொடி யரிவை புலம்புரைத் தன்று.”

(இ - ள்.)—நின்னைப்பிரிந்து ஆற்றேனாகின்றேன்; என்னுடைய திறத்து வருத்தங்கொள்ளாதொழிவாயாக, இப்பொழுது; சுற்றப்பட்ட கண்ணியையுடைய நின்னோடுகூடி விளையாடப்போந்த இளையோர், விளையாடாநிற்ப, அவரோடு கூடுகின்

யொழித்தாற்போன்ற வெளுத்திருந்த வழியில்லாதவறிவுகையைத், தலைமேலே யேற்றிக்கொண்டு, நின் சுற்றத்திடத்தே செலுத்தச் செல்லுவேனோ இன்னும், இறந்துபடினல்லது. நின்வார்த்தையை எனக்குச்சொல்லுவீராக. — எ - று.

அவலமென்றது, பிரிந்தவழி ஆற்றேனென்றவருத்தம் அவலித்தலித. கூற நின்னுரையென அவன்சொற்கேட்டவிருப்பினுங் கூறுவாளிபோன்று, மயங்கிக் கூறியவாறு.

(உருசு)

* நகாரெனவந்தவென்றும் பாடம்.

† குளம்பாதயானுரென்றும் பிரதிபேதமுண்டு.

‡ புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், ௧.

264.



(உ௫௪.) இளையரு முதியருங் வேறுபுலம் படர
எடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
விடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையு
ளின்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை *செல்லு மாயின் மற்று
முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கென நாளு
மானாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டானே.

திணையும் துறையும் அவை.
......... கயமனார் பாடியது.

(இ - ள்.)—இளையோரும், முதியோரும், வேற்றுநிலத்தே, விலங்கிப்போக, யான் எடுப்பவும், நீ எழுந்திராயாய், நினது மார்பம், நிலத்தைப்பொருந்தச், சுரத்திடை மேம்படவீழ்ந்த இளையோய், வெளுத்தவளையில்லாத வறியகையைத் தலைமேலே வைத்துச், சுற்றத்தின்கண் இத்தன்மையனாயினன் இளையனென்று யான்சொல்ல நின் இறந்துபாடுகூடியவார்த்தைசெல்லுமாயின், ஊர்முன்னர்ப்பழுத்த கோளியாகிய ஆலமரத்தின்கட் புள்ளுக்குள்மிகும், புதுவருவாயையுடைய அத்தன்மைத்து, என்னுடையமகனது செல்வமும் தலைமையும் எமக்கென்று நாடோறும் அமையாது புகழும், நின்னுடையமாதா, எவ்வாறாவாள்கொல்! அவள் இரங்கத்தக்கவள்தான்.— (எ - று.)

(இ - ள்.) ஐயோவென்று ஆற்றுவேனாயின் அவ்வுரைவழியேவந்து நின் உடம்பாயினும் யான்காணப்பெறுமல் எத்துஞ்செய்யுமோவென்று புலியையஞ்சுவேன்; இவ்விடத்தினின்றும் எடுத்துக்கொண்டுபோவேனென்றாலுன்பின் நினது அகலிய மார்பை எடுக்கமாட்டேன்; என்னையொப்பப் பெரிய நடுக்கத்தை உறுவதாக, வுன்னை இறந்துபடும்பரிசுதந்ததாக்கியெ அறமில்லாதகூற்றே; யாம் மலையினது நிழற்கண்ணே அடைவேமாக; எனது நிரைத்த வளையையுடைய முன்கையைப் பிடித்து மெல்லநடப்பாயாக. - (எ - று.)

கடவீரயென்னும் முன்னிலைவினைச்சொல் சின்னென்னும் இடைச்சொல்லான் அசைக்கப்பட்டுநின்றது. (உருரு)

(உருசு.) கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு
சுரம்பல வந்த வெமக்கு மருளி
வியன்மல ரகன்பொழி லீமத் தாழி
யகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே.

திணையும் துறையும் அவை.

.................................................

(இ - ள்.) கலம்வனையும் வேட்கோவே, கலம்வனையும் வேட்கோவே, சகடஞ் செலுத்தும் உருளின்கண் ஆரத்தைப்பொருந்திவந்த சிறிய வெள்ளியபல்லிபோல் கொருகலைநாளாற் பலசுரமும் தன்னொடுகழித்துவந்த எமக்கும் அருள்பண்ணி யானும் அவனோடேகூடியிருக்கும்படி பெரியபரப்பினையுடைய அகலியபூமியிடத்துக் காட்டின்கண் முதுமக்கட்டாழியை இடமுடைத்தாக வனைவாயாக, பெரிய இடத்தினையுடைய பழைய ஊரின்கட் கலம்வனையும்வேட்கோவே. - (எ - று.)

'எமக்கும்' என்றது, பன்மையும் தலைமையுங்கருதாது மயக்கங்கூறிநின்றது.

கோவே, கோவே, மூதூர்க்கலஞ்செய்கோவே, எமக்கும் அருளி அகலிதாக வனைகவெனக்கூட்டுக.

அடுக்கு விரைவின்கண்வந்தது. (உருசு)

(உருஎ.) செருப்பிடைச் சிறுபரல் அன்னன் கணைக்கால்

சிலையின் மாற்றி யோனே யவைதாம்
மிகப்பல வாயினு மென்னா மெனைத்தும்
வெண்கோ டோன்றாக் குழிசியொடு
நாளுறை மத்தொலி கேளா தோனே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

......... ......... .........

உண்டாட்டாவது,—

*"தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்துமிகின்று."

(இ - ள்.) ......... ......... இரண்டகாலையும் அழகிய வயிற்றினையும் பரந்த மார்பினையும் பசியகண்ணினையும் குச்சிற்புல் கிளைத்தாற்போன்ற நிறம்பொருந்திய மயிரினையுடைய தாடியினையும் செவியிறந்து முன்னே தாழ்ந்த கதுப்பினையுமுடையவனாய் வில்லுடனே யார்தான் இவ்வளிக்கத்தக்கான்றான்? ஆராயின் ஊனைப் பெரிதும் நீக்கினது மிலன்; தனக்கு அரணெனக்கருதிக் காட்டைக் கொண்டது மிலன்; இற்றைநாட்காலையே பொருந்தாரது இனமாகியநிரைபோகின்ற இடத்தைப்பார்த்துத் தன்கையாற்குறித்து, மெல்ல எண்ணிக் கரந்தையார்செய்யும்பூசலை மாற்றி வில்லாலேகொடுபோந்தனன்; அந்நிரைதாம் மிகப்பலவேயாயினும், என்னபயன்படும் எத்தன்மைத்தும், பால்முதலியன பெய்யப்படாதுமயிற், சிறிதும் வெள்ளிய முகந்தோன்றாதபானையைக்காண்டலுடனே நாட்காலத்து உறைதெறிப்பக்கடையும் மத்தினொலியைக் கேளாதபடி பிறருக்குநேராகக்கொடுத்தல் வல்லனாயினான், அவனுக்கே.—(எ - று.)

பகைவர் மேல்நடக்கவொட்டாது எதிரினின்றுவிலக்குதலின், 'செருப்பி டைச் சிறுபர லன்னன்' எனப்பட்டது. 'அன்ன' என்று பாடமோதி, செருப்பி டைச்சிறுபரலோசைபோலநெடிய ஓசையையுடைய கரலென்றுரைப்பாருமுளர். 'யார்கொலலோ' என்றது, 'அறியான்வினுதலன்றி, வியப்பின்கண்வந்தது.' 'ஊர்பெரி திகந்தன்றுமிலனே' என்பது, வினைகோட்கடமை.

சிறுபரலன்னன், கவளனுகிய அளியனுனவன்றான் யார்கொலலோ! தேரின் வில்லோடு, ஊர்பெரிது இகந்தன்றுமிலனுய்க், கடுமைக்கொண்டதுமிலனுய், நோக்கி எண்ணி மாற்றினான்; மாற்றிக் குழிசிகிண்டலோடு மத்தொலிகேளாதோனாயி னவனுக்கு அவைதாம் மிகப்பலவாயினும், என்னுமெனக்கூட்டுக.

கேளாதோற்கெனவுருபுவிரித்துரைப்பினுமமையும். (உரு)

(உரு.) முட்டாற் கானை முதுபழ னேய்ப்பத்
தெறிவப விளைந்த தீங்கந் தாரம்
நிறுத்த வாயந் தலைச்சென் றுண்டு
பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
(ரு) வெச்சி லீர்ங்கை விற்புறந் திமிரிப்

* புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கரு.

புலம்புக் கன்னே புல்லணற் காளை
யொருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
யாதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே.

திணையும் துறையும் அவை.

...... உலோச்சனார் பாடியது.

(இ - ள்.) முட்டாளையுடைய காரியினது முதிர்ந்தபழத்தையொப்ப முற்ற விளைந்த இனிய கந்தாரமென்னும்பெயரையுடைய மதுவையுடைய வேற்றுப்புலத்துத் தான்கொண்டுவந்தநிறத்தினநிரையைக் கள்விலைக்கு நேராகக்கொடுத்து உண்டு செவ்வித்தசையைத்தின்று செவ்வி நிணமிக்க எச்சிலாகிய ஈரமுடையகையை வில்லினதுபுறத்தேதிமிர்த்து வேற்றுநாட்டின்கட்புக்கானே, புல்லியதாடியையுடையகாளை; இவ்விருந்தமறவர் ஒருகாலுண்பதன்முன்னே பெரிய ஆனிரையை இவ்வூர்ப்புறமெல்லாம் நிறையக் கொடுதருகுவன்; யாவர்க்கும்வாராது அதற்பொருட்டுத் தொடுதலைப் பாதுகாத்துவைப்பாயாக, முதிர்ந்தமதுவையுடையசாடியை; ஆவைக்கொண்டுவரக் கலந்ததுளியையுடையனாய் அம்மதுவை விரும்புவோன் விடாய்த்தலுமுண்டாம்.—(எ - று.)

தலைச்சென்றென்பது, தலைச்செலவினைத்திரிக்கப்பட்டது. இதுக்குக் கள் விலையாட்டியிடத்தேசெல்லவென்றுமாம். தீங்கட்டாரமென்றோதிக் கள்ளாகிய இனியபண்டமெனினுமமையும். காய்தலுமுண்டென்பதற்குக் கள்வெய்யோனாகலின், நின்னை வெகுளவுங்கூடுமென்பாருமுளர். இவன்நிரைகொள்ளச் செல்கின்

றமைகண்டார் கன்விலையாட்டிக்குக்கூறியது. (உருஅ)

(உருகூ.) ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது
இலைபுதை பெருங்காட்டுத் தலைக்கரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே.

திணை - கரந்தை; துறை - செருமலைதலும் பிள்ளைப்பெயர்ச்சியுமாம்.

......கோடைபாடியபெரும்பூதனார் பாடியது.

(செருமலைதலாவது,—

*"வெட்சியர்வாரக் கண்ணுற் றவரை
யட்குவரத் தாக்கி யமர்செருப் புரிந்தன்று."

* புறப்பொருள்வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௬.

மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
யிடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே.

திணை - அது; துறை - கையறுநிலை; பாடாண்பாட்டுமாம்.
......... ......... ......... வடமோதங்கிழார் பாடியது.

(இ - ள்.) ஓசைமிகவேண்டுமென்று அறையினும் ஓசையை உள்வாங்கி வேறுபட்டு இரங்கற்பண்ணாகிய விளரியைச்சென்றுறுகின்ற இனிய யாப்புத்தொடையின தீங்கைகளைந்து நடுங்குநெஞ்சத்தைத்தலைப்பட்டுப் புறப்பட்டவளவின் நிமித்த வழியாக ஒருமனைவி விரித்துவருகின்ற மயிரைப்பார்த்துக் களர்நிலத்துள்ள கள்ளி மரத்தின் நிழற்கணுண்டாகிய தெய்வத்தையேத்திப் பசிதங்கிய வயிற்றையுடையையாய் இருங்கிக் கையாற்றொழுது கன்குரிசிலைக் காணமாட்டேன்கொல்லோவென்று எதிர்வருவாரைப்பார்த்துக் கேட்டுவருகின்ற பாண, கேட்பாயாக, அவன் செல்வம்பட்டதில்லைமை; இனி நீ அவன் நமக்குவிட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும், அன்றி, அவனோடுகூடி இன்புற்றிருந்தவிடத்து அவனையின்றி உயிர்வாழ்தற்பொருட்டு இரக்கக்கடவோமென்றெழுந்திருந்து வருந்திக்கொள்வாயாயினும் இரண்டும் நினது கையகத்துள்ளன; மிக்க அனுமையையுடைய ஊர் முன்னாகச்செய்யப்பட்ட பூசலின்கட்டோன்றித் தன்னுடைய ஊரின்கண் மிக்க நிரையைக்கொண்ட மறத்தினையுடையவீரர் எய்யப்பட்ட அப்புவெள்ளத்தைத் தன் துடியே புணையாகவென்று புல்லவரைக்கொன்று அவர்கொண்டநிரையை மீட்டு உலகம்தனிப்பச் சூழ்ந்துகொண்ட பாம்பினது கூரியபல்லினின்றும் பிழைத்துப் போந்த திங்களைப்போல மறவருடைய கையினின்றும் பிழைத்துப்போந்த கன்றையுடைய பலவாகிய ஆனிரையுடனேவந்த, சொல்லையுடையவனைத் தோலுரித்த பாம்புபோலத் தானொருவனுமேயாக அரிதாகச்செல்லப்படும் தேவருலகத்தின் கட்போயினான்; அவனதுடம்பு காட்டுட் சிற்றியாற்றினது அரியகரையிடத்துக் காலுற நின்று நடுக்கத்தோடுசாய்ந்த விலங்கினையொப்ப அம்பாற்சலித்து அவ்விடத்துவீழ்ந்ததால் உயர்ந்தகீர்த்தி மிகவுந்தோன்றிய மறவன்பெயர் மென்மையமைந்த மயிலினது அழகியமயிராகிய பீலியைச்சூட்டப்பட்டுப் பிறர் இடங்கொள்ளப்படாத சிறியவிடத்துப் புடைவையாற்செய்யப்பட்டபந்தர்க்கீழ்நட்ட கன்மேலது. (எ - று.)

சூட்டியென்பது, சூட்டவெனத் திரிக்கப்பட்டது; சூட்டப்பட்டெனினுமமையும். "மனையோள்கூந்தனோக்கி" என்பதற்குப் பாண என்மனைவியது சரியும் மயிரைநோக்கியெனவும், "புரவுத்தொடுத்து" என்பதற்கு அன்று ஓம்படைப்புரந்தபரிசைப்பாடியெனவுமுரைப்பாருமுளர்.

(உகo)

261.

## புறநானூறு மூலமும்

ஊரையும்.

உ௬௧

நெய்யுலை சொரிந்த மையூ னோசை
புதுக்கண் மாக்கள் செதுக்க ணாரப்
பயந்தனை மன்னான் முன்னே யினியே
பல்லாத் தழீஇய கல்லா வல்வி
லுழைக்குரற் கூகை யழைப்ப வாட்டி
நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட
நிரையிவட் டந்து நடுகல் லாகிய
வென்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்
கொய்ம்மழித் தலையொடு கைம்மை யுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்
புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே.

திணையும் துறையும் அவை.

........ ........ ஆவூர்மூலங்கிழார் பாடியது.

(இ - ள்.) அந்தோ! என்னினைவனது அடையாத பெரிய இல்லே, வண்டு கன்படியும் மதுவினால் ஒழியாதமண்டையுடனே யாவர்க்கும் வரையாமல்வழங்கும் மிக்க சோற்றையுடைய முரிந்த குறட்டையுடைத்தாகியமுற்றம் நீரற்றயாற்றினிடம் எத்தன்மைத்து அத்தன்மைத்தாகக்கண்டேன், நிச்சயமாக; என்கண்ணினை சோர்ந்துவீழ்வனவாக; உலகத்தைக்காக்கும்வேந்தருடைய செல்வமிக்கதிருநகரின்கண் மதத்தான் மயங்கியயானை உயங்குதலான் கெட்டுயிர்ப்புக்கொண்டாற் போன்ற நெஞ்சாய்கின்ற உலையின்கண் சொரியப்பட்ட ஆட்டிறைச்சியினது ஓசை யையுடைய பொரியலைப் புதுமாத்தருடைய ஒளிமழுங்கினகலன் தன்னிறையவுண்டாக்கினாய், முன்பு; அது கழிந்தது; இப்பொழுது புல ஆனிரையைக்கைக்கொண்டு கற்கவேண்டாத வலிய விற்படையைத் தன்னிடத்தே தொலைமிகவுண்டி கூகை தன் இனத்தை அழைக்கும்படி அலைத்து நாகினதுமுலையே நறிய பூவை யுடைய கரந்தையை அறிவுடையோர்சூட்டுமுறைமையிலேசூட்ட நிரையை இவ் வூரின்கண் மீட்டுத்தந்து கடப்பட்ட கல்லாகிய வென்றிவேலையுடைய இறைவனில் லாமையால் தனித்துக் கொய்யப்பட்ட வட்டமாகிய தலையுடனே கைம்மைகோ ண்டிகக் கலக்கமுற்று ஒழிக்கப்பட்ட அணிகலத்தையுடைய அவன்மனைவியை யொப்பப் பொலிவழிந்தனை, பல அழகுமிழந்து.—(எ - று.)

அம்பியினென்புழி, இன் - அசைநிலை. 'அம்பியினற்றாக' என்று பாடமோது வாருமுளர். மன் - கழிவின்கண்வந்தது. கண் - அசை.

எங்கைநீயேரில்லே! செதுக்கணரப்பயந்தனைமன்; இனி மகடூப்போலப் பல அணியுமிழந்து புல்லென்றனைபாய் அம்பியற்றாகக்கண்டேன்; கண்ட என்கண் சோர்கவெனக்கூட்டுக.

ஓசையென்றது, ஆகுபெயரான் ஓசையையுடையகறியை; இஃது ஓர்திசைச் சொல். 'செதுக்கணர' என்பதற்குச் செதுகின குடர்நிறையவென்றுமாம்; கைம் மிஞ்சவென்றுமாம். (உசுக)

(௨௬௨.) நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவல் இட்ட புன்கால் பந்தர்ப்
புனிறுதரு இளமணல் நிறையப் பெய்ம்மின்
ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வரூஉம் என்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு; தலைத்தோற்றமுமாம்.
......... ......... மதுரைப்பேராலவாயார் பாடியது.

தலைத்தோற்றமாவது,—

*"உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று."

(இ - ள்.)—மதுவையும் அலைத்து வடிம்படி பிழிமின்; ஆட்டுவிடையையும் படுமின்; பசிய தழையாலே வேயப்பட்ட புல்லிய காலையுடைய பந்தரின்கண்ணே கொழித்துக் கொடுவரப்பட்ட இளையமணலை நிரம்பப்பரப்புமின்; பகைவரது தூசிப்படையை முறித்துப், பெயர்ந்து போதுகிற தனது படைக்குப் பின்னே நின்று நிரையுடனே வருகின்ற, என்னிறைவனுக்குப் பக்கமறவாராய் நிரைகொண்டு வருவோர் அவன் தன்னினும் பெரிய இளைப்பையுடையர்.—(எ - று.)

சாயல் - விடாயாலுண்டாய மென்மை.

என்னைக்கு, உழையோர், தன்னினும், பெருஞ்சாயலர்; அவர்க்கு நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்; பெய்ம்மினெனக் கூட்டுக. (௨௬௨)

(௨௬௩.) †பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண்
இரும்பறை யிரவல சேறி யாயிற்
றொழாதனை கழித லோம்புமதி வழாது
வண்டுமேம் படூஉமிவ் வறநிலை யாறே
பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து
கல்லா விளையர் நீங்க நீங்கான்

வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.

.............................................

(இ - ள்.)—பெரியகளிற்றின் அடிபோலத்தோன்றும் ஒருகண்ணரிகிணையுடைத் தாகிய பெரிய பஃறையினையுடைய இரவலனே, நீபோகின்றாயாயின் தொழாயாய்ப்

---

* புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கஉ.

† இதுமுதலிய மூன்றுபாட்டுக்களின் உரையும், உசுசு-ம் பாட்டும் அதனுரையும் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள்வீட்டுப் பிரதியில்மட்டு மிருந்தன.

கொடியவழி, பல ஆக்களாகிய இரண்டகினர் மீண்டு தன்னுடனேதரப்போந்து இயல்பாகிய போர்த்தொழிலையுடையவீரர், இரிந்தோடத், தான்போகானாய் வில் லுமிழப்பட்ட விரைந்த அம்புகுளிப்பக் கணையைக்கொல்லும், புனலின்கண் அணை போல எதிர்நின்று விலக்கியவனது கல்லை.—(எ - று.)

புனற்சிறையாயின் விலங்கியோன்கல்லைத் தொழாதனைகழிதலை ஓம்பு; தொழவே அவ்வறநிலையாறுவண்டுமேம்படுமெனக் கூட்டுக.

தொழுதுபோகவே கொடுங்கானம்மழைபெய்தலாற்குளிருமென்பான், காரிய மாகியவண்டுமேம்படுதலைக்கூறினான். வண்டென்பது, மறவருளொருசாதியென்பா ருமுளர். ஆறு வண்டுமேம்படூஉமென, இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்து மேலேறிநின்றது. (உசுங)

(உசுச.) பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லுங் கன்றொடு
(ரு) கறவை தந்து பகைவ ரோட்டிய
நெடுந்தகை கழிந்தமை யறியா
தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே!

திணையும் துறையும் அவை.

........*உறையூர் இளம்பொன்வாணிகனார் பாடியது.

(இ - ள்.) பருக்கைகளையுடையவிடத்துத் திட்டையைச்சேர்த்தி ஆண்டுள்ள மரலைக்கீறித்தொடுக்கப்பட்ட சிவந்தபூவையுடைய கண்ணியுடனே, அழகியமயிலினது பீலியைச்சூட்டிப், பெயரையெழுதி இப்பொழுதுநட்டார், கல்லையும்; கன்றுடனே கறவையையுமீட்டுக்கொண்டுவந்து மறவரையோட்டிய நெடுந்தகை பட்டமையறியாது இன்றும்வருங்கொல்லோ, பாணரது சுற்றம்?—(எ - று.)

பட்டமையறிந்துவாராதொழியுமோ, அறியாதுவருமோவென, ஐயமாக்குக. பதுக்கைசேர்த்தலேயன்றிக் கல்லும் நட்டனரென, உம்மை எஞ்சிநின்றது (உசுச)

(உசுரு.) ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
யோங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
(ரு) கல்லா யினையே கடுமான் றோன்றல்!
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கைப்

பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்
கடும்பகட் டியானை வேந்த ரொ
டொடுங்கா வென்றியு நின்னொடு செல்லே"

---

* .........ன்சாத்தங்கொற்றனர் பாடியதென்றும் பிரதிபேதமுண்டு.

திணையும் துறையும் அவை.

……. முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடியது.

(இ - ள்.) ஊரைமிகவுங்கடந்த முரம்புநிலமாகிய முதிர்ந்த பறந்தலையிடத்து உயர்ந்தநிலையையுடைய வேங்கையினது ஒள்ளிய கொத்தாகிய நறியபூவைப் பனையோலையாலலங்கரித்துத்தொடுத்து ………………… ………………… (உசுரு)

(உசுசு.) *பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்
புழற்கா லாம்ப லகலடை நீழற்
கதிர்க்கோடு நந்தின் சுரிமுக வேற்றை
நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த வவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல
வல்லே களைமதி யத்தை யுள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
னறிவுகெட நின்ற நல்கூர் மையே.—

திணை பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் உருவப் பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

(இ - ள்.)—பயன்பொருந்திய பெரியமுகில் பெய்யாதொழிதலால் நீர்நிலைகள் களியாய்முள்ளியும் கோடைக்காலமாயினும் தீம்பொருந்திய தாளையுடைய ஆம்பலினது அகலிய இலையினிழற்கண் கதிர்போலுங்கோட்டையுடைய நத்தையினது சரிமுகத்தையுடைய ஏற்றையாகிய இளையசங்குடனே மகற்காலத்தேமணங்கூடும் நீர்விளங்கும் வயலையுடைத்தாகிய நாட்டையுடைய பெரிய வென்றியையுடையோய், ஆளியத்தைப்பொருந்தும் கொடியவுடையினையும் வலியகுதிரையினையுமுடைய சென்னி! அறிவானமைந்தோர் தொக்கிருந்த அவையின்கண் சென்று பொருந்தினானொருவன் யானுற்ற அன்பத்திற்குத்துணையாய் எனக்கு நீ பற்றாக வேண்டுமென்னும் ஆர்வாரத்தை அவன் விலையத்தீர்க்குமாறுபோல விளையத் தீர்ப்பாயாக, என்னைக் கருதிவரப்பட்ட விருந்தினைக்கண்டொளிந்து அவர்க்குவிருந்தாற்றமாட்டாமல் ஒளிக்கும் தன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய ஐம்பொறியும் குறைவின்றிப்பொருந்திய எனது யாக்கையின்கட்டோன்றி அவற்றானாயபயன்கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற வறுமையை.—(எ - று.)

மதியும் அத்தையும் - அசைநிலை.

---

* இப்பாட்டு, புறத்திரட்டிலும் காணப்பட்டது.

*(உகூள.) ......... ......... ......... .........

*(உகூஅ.) ......... ......... ......... .........

(உகூகூ.) †குயில்வா யன்ன கூர்முகை யதிரல்
பயிலா தல்கிய ...... காழ் மாலை
மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்
ஒன்றிரு முறையிருந் துண்ட பின்றை
உவலைக் கண்ணித் துடியன் வந்தெனப்
பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றிது
கொள்ளா யென்னக் கள்ளின் வாழ்த்திக்
கரந்தை நீடிய வறிந்துமாறு செருவிற்
பல்லா னினநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப் பருந் தார்ப்பத்
தடிந்துமாறு பெயர்த்தவிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

ஔவையார். (உகூக)

(உஎo.) பன்மீ னிமைக்கு மாக விசும்பி
னிரங்கு முரசி னினஞ்சா லியானை

* இவ்வெண்களுக்குரிய பாட்டுக்கள், கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலும் காணப்படவில்லை.

† இதுமுதலிய வெல்லாப்பாட்டிற்கும் உரை அகப்படவில்லை; மூலங்களும் இடையிடையே சிதைந்தும் பொருளினுண்மைகாணக்கூடாதவண்ணம் பிறழ்ந்தும் போயிருக்கின்றன.

270 – 272



நிலந்தவ வுருட்டிய நேமி யோருஞ்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
நறுவிரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே!
நோகோ யானே நோக்குமதி நீயே!
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
யின்னிசை கேட்ட துன்னரு மறவர்
வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை
விழுநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மையோன் றிறத்தே.

திணை - கரந்தை; துறை - கையறுநிலை.
கண்டோர் தாய்க்குச்சொல்லியது.—
கழாத்தலையார். (உஎ0)

(உஎக) நீரறவறியா நிலமுதற் கலந்த
கருங்குர னொச்சிக் கண்ணார் குவவுத்தழை
மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
தொறுவாய்ப் பட்ட தெரியலூ ரான்
செத்துப் பருந்துண் வெப்பாக் கண்டனம்
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே!

திணை - நொச்சி; துறை - செருவிடைவீழ்தல்.

வெறிபாடிய காமக்கண்ணியார். (உஎக)

(உஎஉ.) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காதன் னன்மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
(ரு) தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.

திணையும் துறையும் அவை.

மோசிசாத்தனார். (உஎஉ)

நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கு
மஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்
நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்குஞ்
செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
யென்னா குவிர்கொ லளியிர் நுமக்கு
மிவணுறை வாழ்க்கையோ வரிதே யானு
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்
சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணுங்
கழிகல மகளிர் போல
வழிநினைந் திருத்த லதனினு மரிதே.

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்.
மாரோக்கத்து நப்பசலையார். (உ௮௦)

(உ௮௧.) *(க) தீங்கனி யிரமொடு வேம்பு (உ) மனைச்செரீஇ
(௩) வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
(௪) கைபயப் பெயர்த்து (௫) மைவிழு திழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
(௬) காக்க வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய

285. 286.



(௩)திரிந்த வாய்வா டிருத்தாத்
(௪)தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.

திணையும் துறையும் அவை.

ஓரம்போகியார். (உ௮௪)

க. சூட்டி. உ. பிறையாக. ௩. திருந்த. ௪. தனக்கிருந்தானை.

(உ௪௫.) பாசறை யீரே பாசறை யீரே !
துடியன் கையது வேலே யடிபுணர்
வாங்கிரு மருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே காண்வரக்
கடுந்தெற் றுமூடையின் ............
வாடிய மாலை மலைந்த சென்னியன்
வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு
நெடுநகர் வந்தென விடுகணை யொலித்த
(க) மூரிவெண் டோள் ..................
சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ
(உ) மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக
நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
அதுகண்டு, (௩) பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்
திறைஞ்சி யோனே குரிசில் பிறங்குகதிர்
கல்மருங் கழனித் தண்ணடை யொழிய
(௪) வில்லம்பா டொக்கற் றலைவற்கோர்
காம்பைச் சீறூர் நல்கினன் வேவே.

திணை - வாகை; துறை - ..?........ மூல்லை-

(உ௪௫)

அரிசில்கிழார்.

க. மூரிவெண் டோல். உ. மாறுபடுநெடு. ௩. பார்த்தோர். ௪. வலம்பாடு.

(உ௪௬.) வெள்ளை வெள்ளி யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டை (க) யென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை (உ) போர்ப்பித் திலதே.

திணை - தும்பை; துறை - வேத்தியல்.

(உ௪௬)

ஔவையார்.

(உ௮எ.) துடியெறியும் புலைய
எறிகோல்கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை யண்ணல் யானை
யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளுந்
தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.

திணை - காஞ்சி; துறை - நீண்மொழி.

சாத்தந்தையார். (உ௮எ)

295 – 298.



வாடுமுலை யூறிச் சுரந்தன
வோடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - தும்பை; துறை - உவகைக்கலுழ்ச்சி.

ஔவையார். (உகூரு)

க. பெயர்த். உ. தொழுகைத். ௩. தூங்கெதிர்.

(உகூசு.) வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவு
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவு
மெல்லா மனையுங் கல்லென் றனவே
வேந்துடன் றெறிவான் கொல்லோ
(ரு) நெடிதுவந் தன்றுநெடுந் தகைதேரே

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை

வெள்ளைமாளர். (உகூசு)

(உகஎ.) பெருநீர் மேவற் றண்ணடை யெருமை
இருமருப் புறழு நெடுமா (க)ணொற்றின்
பைம்பயி ரதிர்த்த கோதின் கோலணைக்
கன்றுடை மரையா துஞ்சுஞ் சீறூர்க்
கோளிவண் வேண்டேம் புரவே (உ)நாரரி
(ங)நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்பு ளீனுந்
தண்ணடை பெறுதலு முரித்தே (ச)வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.

திணை - வேட்சி; துறை - உண்டாட்டு.

........ ........ ........ ........ (உகஎ)

க. நெற்றின். உ. நாறி. ங. நிறைமுதிர். ச. வைந்நுனை.

(உகஅ.) எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே யினியே
நேரா ரா ரெயின் முற்றி வாய்மடித்
........ ........ ரநீழின் றெனவே.

திணை - கரந்தை; துறை - நெடுமொழி.

*ஆலியார். (உகஅ)

* ஆலியாரென்றும் பிரதிபேதமுண்டு.

ருரு

299-304.



(உகூகூ.) பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
(க)னுழுத்த திருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவ லெருத்திற்
றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
யணங்குடை முருகன் கோட்டத்துக்
(உ)கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே.

திணை - நொச்சி; துறை - குதிரைமறம்.

பொன்முடியார். (உகூகூ)

க. உழுத்ததருண. உ. கலங்கொடா.

(௩00.) தொரூஉ தொரூஉ வென்றி தோலொடு
துறுகன் மறையினு முய்குவை போலாய்
[illegible] நீயெறிந் தோன்றம்பியே
யகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரூ ரட்ட கள்ளிற்
(க)கோரிற் கோரிற் றேருமா னின்னே.

திணை - தும்பை; துறை - தானைமறம்.

அரிசில்கிழார். (௩00)

க. கோரிற்றோயிற்.

(௩0௧.) புல்சான் றீரே! புல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
அமரின் இட்ட அருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே!
முரசுமுழங்கு (க)தானை நும்மரசு மோம்புமின்
ஒளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமின்
எனைநாட் (உ)டங்குநும் போரே யனைநா
ளெறியா (ந)ரெறிதல் யாவண (ச)தெறிந்தோ
ரெதிர்சென் றெறிதலுஞ் (௫)செல்லா னிதனு
லறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்தல் ஓம்புமி னுதுக்கா
ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்பு பாராட்டி
யெல்லிடைப் படுநந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் (௬)போலான் றனிலங் கிலை வேலே.

310-314



யூன்ளில னென்னும் புன்னெஞ்ஞன் றம்பு
மானுளோ யன்ன குறிஞித்
தோன்மிசைக் கிடந்த புல்லணலோனே.

திணையும் துறையும் அவை.

பொன்முடியார். (௩௧௦)

(௩௧௧.) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
௫ கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகைய வோர்
தோல்கொண்டு மறைக்குஞ் சால்புடை யோனே.

திணை - அது; துறை - பாடாண்பாட்டு.

ஔவையார். (௩௧௧)

(௩௧௨.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
௫ யொளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.

பொன்முடியார். (௩௧௨)

(௩௧௩.) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல
௫ வுப்போய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே
யெள்ளமை வின்றவ னுள்ளிய பொருளே.

திணை - அது; துறை - வல்லாண்முல்லை.

மாங்குடி கிழார். (௩௧௩)

(௩௧௪.) மனைக்கு விளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்கு வரம் பாகிய வென்வே னெடுந்தகை

